SRI V. V. RAMASWAMI : சென்னைத் துறைமுகத்தில் இறங்கு கிறவர்களைப்பற்றிச் சென்னைத் துறைமுக அதிகாரிகள் அந்தந்த மாவட்டக் கலெக்டர்களுக்கு இன்னார் இன்னார் திரும்பியிருக்கிறார்கள் என்று தகவல் கொடுத்திருப்பார்கள் அல்லவா ? அப்படியிருக்கக் கலெக்டரிடமிருந்து அப்படித் திரும்பிவந்தவர்கள் என்னென்ன வேலையில் இருக்கிறார்கள் என்பதைப்பற்றி ஒரு அறிக்கை கேட்டு வாங்குவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வேறு வேறு இடங்களுக்கு மலேயாவிலிருந்து வந்து இறங்கிப் போகிறவர்கள்தான் கலெக்டரை அணுக வேண்டும். கலெக்டருக்குத் தகவல் வந்திருக்கிறதா என்று விசாரித்ததில், இது வரையில் அப்படி ஒன்றும் வரவில்லை.

SRI M. ETHIRAJALU : பொதுவாக மலேயாவிலிருந்து இங்கு தாயகத்திற்குத் திரும்புகிறவர்கள் சென்னையில்தான் வந்து இறங்கிறார்கள். அவர்கள் இங்கு வந்து இறங்கும்போது, அவர்களுக்குப் போதுமான வசதி செய்துகொடுக்கப்படுவதில்லை. இங்கிருந்து ரெயிலடிக்குப் போவதற்குப் போதுமான வாகன வசதி கிடையாது. அவர்கள் தங்குவதற்காகப் பல லாட்ஜுகளிலிருந்து ப்ரோக்கர்கள் வந்து தங்கள் இஷ்டம்போல் அழைத்துச் சென்று ஏமாற்றம் நடக்கிறது. மேலும், அவர்களுக்கு என்று ரெயிலில் அதிகம் காரேஜ்கள் கோர்க்கப்படுவதில்லை. ஊர் போகும்போது ஜன நெருக்கடியால் அவர்கள் கஷ்டப்படுகிறார்கள், நான் நேரில் கேட்டதைச் சொல்கிறேன். ஆகவே, அப்படி வருகிறவர்கள், தங்கள் வீடுகளுக்குப் போய்ச் சேரும் வரை நமது அரசாங்கத்தார் நல்ல வசதி செய்து கொடுப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அம்மாதிரி ஒரு புகாரும் அரசாங்கத்திற்கு வரவில்லை. இரண்டாவதாக, மலேயாவிலிருந்து வருகிறவர்கள் எல்லோரும் சென்னை ராஜ்யத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல. மற்ற ராஜ்யங்களைச் சேர்ந்தவர்களும் வருகிறார்கள். அப்படி அவர்கள் வந்து மற்ற ராஜ்யங்களுக்குப் போகிறார்கள்.

*Constitution of Madurai as City Municipal Corporation*

* 70 *Q.*—SRI T. PURUSHOTHAM : Will the Hon. the Minister for Local Administration be pleased to state whether there is any proposal before the Government to constitute Madurai as a City Municipal Corporation?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : No, Sir.

SRI T. PURUSHOTHAM : Was not such a request made by the Madurai Municipal Council and was the question ever considered?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Yes, Sir. Such a request was made and was considered. It was decided that it was unnecessary to take up that question immediately.

SRI V. V. RAMASWAMI : 'ஒரு நகரம் கார்ப்பரேஷனாக வேண்டுமென்றால், அதற்கு என்னென்ன தகுதிகள் இருக்கவேண்டும் ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : என்னென்ன தகுதிகள் இருக்க வேண்டுமென்று இப்பொழுது நிர்ணயம் செய்யப்படவில்லை. சென்னையில் உள்ள ஜனத்தொகை போல் மதுரையில் இன்னும் உயரவில்லை. ஆகவே, அதற்கு என்னென்ன தகுதிகள் வேண்டுமென்று நிர்ணயிக்கும் ஒரு ஏற்பாடும் ஆகவில்லை.

MR. CHAIRMAN : Questions are over.